உ

குமரன் றுணை.

திருக்கோட்டாற்றுத்

# தேசிவிநாயகர்

# பன்மணி மாலை.

இது

கோட்டாறு

வீ. சு. பழனிக்குமாரு பண்டாரம் அவர்கள்

இயற்றியது.

ஷை

தேசிவிநாயகராலயத்

தருமகருத்தா

கு இராமநாதன் செட்டியாரவர்கள்

தமது பொருட் செலவினால்

நாகர்கோவில்,

விக்றோரியாப் பிறஸில்

அச்சடிக்கப்பட்டது.

ஆனந்த வருடம். (1914)

உ

முருகன்றுணை.

# சிறப்பாயிரம்.

கோட்டாறு

தமிழ்வித்வான்,



ம. ரா. ரா. ஸ்ரீ டி. கணபதி ஆசாரி அவர்கள் குமாரர்

க. சுவாமிநாத ஆசாரி அவர்கள்

இயற்றியது.

## நேரிசையாசிரியப்பா.

புண்ணியச் சேரர் புரவலர் வஞ்சித்
திண்ணிய மூலந் திருநாள் மன்னர் தஞ்
செந்நெற் களஞ்சிய மென்னச் சிறந்த
நாஞ்சி நாட்டுள் நலமிக வளரும்
பற்பல தேயப் பண்ட மனைத்துந்
தன்னிடத் தடக்கியெத் தரணிக்குந் தருங்
கோட்டாற் றிற்பவக் கேட்டைக் கெடுக்குங்
கருணைத் தடங்கட லாகிய கயமுக
அருதி மூர்த்தியா மமல தேசி
விநாயகன் பாத மென்மல ரிணையில்
ஐந்திலக் கணமுந் ஐயந் திரிபறக்
கற்றவ னெமது கண்மணி போல்பவன்
செய்வன தெளிந்தே செய்யுஞ் செயலின்ன
மெய்வகை விளக்கும் வீர சைவன்
பழனிக் கெனக்கவி பாடும் புலமைப்
பழனிக் குமாருப் பாவல னன்பால்

அமிழ்தினு மினியசெந் தமிழா மாழியின்
மதியெனுந் தோணி வழியே சென்றுமற்
றகப்பொருள் புறப்பொரு ளகப்புறப் பொருணற்
புறப்புறப் பொருள்களாம் புரைதீர்ந் துள்ள
அளப்பறு மணிகளை யள்ளித் திரட்டித்
தெள்ளிய பொருளாந் தெளிவு தோன்ற
வெள்ளிய வுரையின் விளங்கத் தேய்த்துப்
பனுக்கி யியனெறிப் பாலுறு பாவு
நுணுக்கிக் காட்டி நுவலுபா வினமு
மாஞ்செம் பொன்களி னழகுற வமைத்துக்
குணந்தரும் புகழொளி கூர்தரக் கோததவிச்
சொன்மணி மாலையாம் பன்மணி மாலை
திறைவைத் தேத்தினன் செவ்விய அதனைக்
கதிதரு மணியெனக் கருதியக் கடவு
ளடிதொழுந் தொண்ட ரனைவருந் தத்த
மனப்பே டகத்தில் வைத்துப் போற்றிக்
கணிக்கவின் வாயாற் கழறிக் கதிபெறற்
காகுமென் றன்போ டச்சுவா கனத்தி
லேற்றிப் பவனி யெங்கணு மாகச்
செய்தன னவ்வருட் டேசிவி நாயக
னுலயக் காரிய மாசையி னடாத்துந்
தரும கருத்தாத் தானந் தாங்கினோன்
வுரிமையும் பொறையு முண்மையு மூக்கமு
முற்ற துணைகளென் றுளத்திற் பேணுவோன்
வற்றாச் செல்வ வைசியர் குலத்திற்
கணிகல னாகியே யமரும்
இராம நாதன் எனுங்கன வானே.

~

உ

குமரன்றுணை.

திருக்கோட்டாற்றுத்

தேசிவிநாயகர்

# பன்மணி மாலை.

பாயிரம்.

தெய்வ வணக்கம்.

விநாயகர்

கலிவிருத்தம்.

காரி லங்கு கவின்பொழிற் கோடையிற்
சீரி லங்கருட் டேசிவி நாயகன்
பாரி லங்குயர் பன்மணி மாலைநல்
லேரி லங்கவவ் வண்ணலை யேத்துவாம்.

பரசிவம்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அருவாகி யுருவாகி யருவுருவா யகிலசரா சரங்களாகிப், பொருளாகி மலர்மணம்போற் புகுந்துடலிற் சிவசீவப் போதங் காட்டுங், குருவாகி யைந்தொழிற்குங் குறியிடமா யருட்சத்திக் குடியதாகித், திருவாகி யெனதுளத்திற் றிகழொளியாம் பரசிவத்தைச் சிந்தை செய்வாம்.

## பராசத்தி.

எப்பொருட்குமப்பொருளாயெவ்வுயிர்க்குமவ்வுயிராயியையவாள் யாவ, ளொப்பரிய கிருத்தியங்களைந்தினுக்கு மாதாவா மொருத்தி யாவள், செப்பரியநாதத்தின் றீங்கனியாய்ச் சிவமுளையாய்த் திகழ் வாள்யாவ, ளிப்பெரிய ளெவளோவப் பெரும்பெரிய விறைவியையுள் ளெண்ணி வாழ்வாம்.

## முருகக்கடவுள்.

பொறிபுலன்கட்கமையாத பொறியானாய்ச் சரவணச்சண்முகத் தனாகி, யறுவர்முலை யுண்டயனைத் தளையிட்டுக் குருமொழிதன் னையற் கோதித், திறமொடுதண் கடலசுரத் தின்னியவெங் கடல்கலக்கித் தேவர்க் காத்துக், குறமகளை மணந்தெனக்குக் குருவான குமரனை யுட் கொண்டுய் வாமே.

## திருநந்தி தேவர்.

முத்தொழிலோர் முதலானோர் முகிழ்த்தகர மெடுத்தேத்தி முடிகடாழ்த்துச், சித்தமொரு மித்திடித்துச் சேர்ந்திறைஞ்சும் பொ துநெருக்கந் திகழக்காக்கி, நித்தனொரு முமைபாகன் சந்நிதியி னீங்காத கருணை நீடிப், பத்தருளி னிர்த்தமிழம் பதச்சூற்படையி னரைப் பணிந்து வாழ்வாம்.

## சமயாசாரியர்.

ஒருவனத்தின் மறைக்கதவந் திறந்திடவு மடைத்திடவு முரை யோராற்றிட், டொருகுளத்தி லெடுத்திடவு முயர்பாக்க ளுரைத் தோரோருமைப் பெண்ணை, யருமைமிகும் விறுவிடைப்பாட் டருளி யானருளுரைக்கு மன்பிறைக்கி, யுருகியுரு கிக்கரைந்தோ ளிவர்சரண மொருமுடிமேற் கொள்ளுவோமே.

## திருத்தொண்டர் முதலாயினோர்.

அரும்பரமன் றிருந்தலையின் முறிகாட்டி யடிமையென்றன் றுளப்பட்டோ, ளிருங்கருணை மிருந்திலைசத்த திருக்தொண்டத் தொ கைப்பட்ட விறைவனன்பர், சுரும்பருமு மலர்க்கழல்கள் சுரேசனடி யார்பதங்கள் சுடர்க்கோட்டாறும், பெருந்தலத்திற் றேசிவிநாயகன ன்பர் சரணகளொடு பேணிவாழ்வாம்.

## நூற்பயன்.

கோட்டாற்று வணிகர்தெருத் தேசிவிநா யகர்கருணைக் குணத்தை யேத்திப், பாட்டாற்றும் பணிவிடையாப் பகர்ந்தவிப்பன் மணி மாலை படிப்போர் கேட்போர், கேட்டாற்ற லகன்றுயர்நன் மனைவி மக்கட் செல்வமொடு கிழமை பூண்டிங், கூட்டாற்ற லுறவாழ்ந்தன் குயர்கதியும் பெறுவாரீ துண்மை மாதோ.

## அவையடக்கம்.

கருவகற்றுந் தேசிவிநா யகனருள்சேர் கவிஞர்கண்முன் கல்லே னன்பிற் றிருமிகுத்த வுறுப்புகளார்ந் திலகுயர்பன் மணிமாலை செப் பற்குன்ன, வுருமிகுத்த வொருகூரன் சந்திரற்பார்த் துக்குரைத் தாங் குறினுந் தெய்வ, அருண்மிகுதேோர் முன்னவன்சொல் லாத லினுற் கொள்வரென்றே யறைதன் மன்னோ.

[பாயிர முற்றிற்று.]



## நூல்.

### நேரிசைவெண்பா.

தேன்மல்கி யூற்றிறைக்குந் தேமலரில் வண்டார்த்துங்
கான்மல்கு கோட்டாற்றுக் கைம்முகனும்—பான்மல்கு
திங்க ளறுகணிந்த தேசிகவி நாயகன்ற
னங்கழல்க ணெஞ்சுக் கணி. (1)

### கட்டளைக் கலித்துறை.

அணியாகு மொண்டலைக் கென்றடி சூட்டுநல் லன்பர்கடம்
பிணியாகுந் துன்பப் பிறப்பொழிப் பானற் பெருங்கருணைப்
பணியாகு வாகனன் கோட்டாற்றில் வாழும் பரன்சுதன்கண்
மணியாகுந் தேசிவி நாயகன் றன்புகழ் வாழ்த்துகவே. (2)

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வாழ்த்தாதே வாழ்கின்றாய் மனமே யென்று
மாளாதே வாழ்ந்திடநீ மதித்தா யேனுட்
டாழ்த்தாதே கோட்டாற்று வணிகர் வீதி
தனிலமருந் தேசிகனைக் கையோன் றன்னைச்

சூழ்த்தாதே யிருந்தகுறை தொலைப்பா னுன்னித்
தோத்திரித்துச் சூழ்ந்திரந்து தொழுதே துன்பத்
தாழ்த்தாதே யருள்வாயென் றழுதெந் தாயோ
வத்தாவோ வென்றென்று மலறு வாயே. (3)

கலிவிருத்தம்.

வாயி னாலுனை வாழ்த்திலன் பூமியிற்
பேய னாகிப் பிதற்றினன் கோடையென்
றூய னாகிய தேசிவி நாயகா
காயி னாறொழி வேன்செய் கருணையே. (4)

## புயவகுப்பு

வண்ணம்.

கருணை யோடுகவி பாடி நின்றவள்
கயிலை சேருமரு ளாவ ளர்ந்தன
பரம னுருதவு போத ருங்கனி
பரிவி னோடுபெற வேயெ ழுந்தன
மருவு நீடவுண யானை பொன்றுற
மணிமொய் கோடுகொள வேயு வந்தன
வரிய கோடைவளர் தேசி யைங்கர
னறுகு லாவுதொடை யார்பு யங்களே. (5)

கலிவிருத்தம்.

புயலி லங்கிப் பொழியுங்கோட் டாற்றினம்
மயலி லங்கு வசைகெட வாழுமுச்
செயலி லங்குகட் டேசிக யானையை
யியலி லங்கவி யம்பிநின் றேத்துமே. (6)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எத்தாதே போற்றுதே யெண்ணுதே யுழுவலன்பி னிறைஞ்சி டாதே, பாத்தானை வரப்பாடிப் பரவாதே கழிந்தேற்கென் பாலிப் பானோ, நாத்தானே தழுதழுப்ப நவிலுநருக் கினியவரு ணல்கும் பொய்மை, நீத்தானோர் வளர்கோடைத் தேசிகவி நாயகனு நிம லன் றானே. (7)

### நேரிசைவெண்பா.

நிமலன்றன் னீள்கதியி னேர்ந்திடுதற் குன்னிற்
கமலன்றன் புத்திசித்தி காதல்—விமலனுஞ்
சேண்டிகழ்காக் கோட்டாற்றுத் தேசிகவி நாயகனை
வேண்டி விரும்பிநின் மின்.

## மறம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மின்னியலார் வல்லபையான் மிளிரருட்டே சிகவைங்கை மே
லோன் கோட்டாற். றுன்னியமா மலைக்குறவோ ருமமோரா தெம்
பெணைவேட் டோலைதந்தான், றுன்னியது நாவவனெங் கொளித்தா
னும் பிணவெருடர்வேங் தொலையாப் போரின், மன்னியசீர் வெட்சி
முதல் வல்லேமுன் னுயிர்ப்பிச்சை வாங்தந் தோமே. (9)

(இதுவுமது)

### விருத்தத் தாழிசை.

வாங்கருங்கருணை யுளநிறைந்திலகி மருவுதேசிகவி நாயகர்
வளமிகுந்தவுயர் கோடைநீடுவரை மன்னும்வேடர்குலவெமர்கள்பா,
லிரந்துகொள்வதொரு கனியாயிலஃ தேற்றசெய்க்கனுறும் பெ
ண்ணையே, யிசைசையேலஃது கழியிலெய்துமென வெண்ண வேண்
டியதெனுமலெம், பரந்ததாயபுக ழறிகிலாதுரிய பசியகோதையை
யுள் வேட்கையாற், பகருமோலையது தீட்டிஞனவன் பாலிருந்து
வரு தூதனே, காந்தையோவலது காஞ்சியோகடிய காவலாகவுறு
தொச்சியோ, கடிதவற்றினெது வெனினுமேகொளக் கழறுவாய்
விடோம் கலகமே. (10)

## தழை.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கலயமுனி கமண்டலநீர் கவிழ்த்தருடே சிகமுனிதன் கருணை
யாலே, யலகிதிரு வருட்கோட்டாற் றமர்வணிக ரும்பொழில்வா
ய்ந் தளிதேனூறி, யிலகுமிளந் தழையிலைதா மெவ்விடத்துங் கிடைப்
பரிதென் னினிமையான, குலவிளக்காங் குயிலீருங் கொடியிடைக்
காங் குணமொடென்கை கிடைத்ததாமே. (11)

(இதவுமது)

விருத்தத் தாழிசை.

கிடையிலம்புலியை யுடையரைங்கையொரு கிளருகிம்புரிமொய் கொம்புகிண், கிணிசதங்கைமிளிர் பதமிலங்கவளர் கேடில் தேசிகர்தங் கோடையின், முடைததும்புறுநி வேலகின்பசிய முறியையவாரமொடு தாங்கிவாண், முகமிரண்டெனவும் வாயமூன்றெனவு முலைகளுன்கெனவு மேனிதா, னடைவிலைந்தெனவு நகைகளாறெனவு மளகமேழெனவும் வீசுதே, சளவையொன்றுபல கோடியாமெனவு மாயினுளதனை யாசையோ, டிடைவிடாதுபல புகழ்வளம்மியி லிசைத்தரைத்தக மடுத்தலொன், றிலாதுமற்றுளவெலா மியற்றினளெம்மிறைவியாய விளமயிலியே. (12)

வஞ்சிவிருத்தம்.

மயிலின மன்றில்செவ் வாய்க்கிளிகள்
குயிலின மார்பொழிற் கோட்டாறறி
னயனரு டேசிவி நாயகர்பங்
கயவடி வாழ்த்துதல் கதியாமே. (13)

வஞ்சித்துறை.

கதிதருவான் கவின்கோடைப்
பதியிலருட் பதியாகித்
திதிசெயைங்கைத் தேசிகன்றாள்
விதியொடுபூ விடுவார்க்கே. (14)

நேரிசைவெண்பா.

விடுத்து மலரடியில் வீசுகரைக் கோட்டாற்
றடுப்புகாட் டேசிக வும்பன்—றிடத்திற்
கணமோடு வாழக் கயிலைதனில் வைப்பான்
குணமோடு கைம்மலரிற் கொண்டு. (15

சம்பிரதம்.

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொண்டறவழ்கின்ற மணிமந்திரகிறைந்திலகு கோட்டாறெ பனும் தியினோர், குலவணிகர் மறுகிநெருகொம்பிரு முறச்செவி

கொழுக்கழும் மதவாரியோ, டண்டர்தொழ வமர்கின்ற தேசிக
விநாயகனன்பரு நிக்கெட்டிலை. யானையொடு சற்றேனு மஞ்சாது
பருகுவோமலகலா வெட்டிவரையைக், கண்டிட வருந்துவோம்
வீட்டுளுந்திரிதரக் கானகம் பலகாட்டுவோங்கனிவோடி யாவருங்
காணவே மணலையுங் கயிறுத்தி ரிக்குவிடுவோ, மண்டுதிரிலோகங்
கண்மன்னுமகலெரியையும் வண்கையாலேந்திடுவமிவ். வகையான
வித்தைபல பலவாக வெம்போலிம் மாநிலத்தியார் செய்வரே. (16)

## மடக்கு.

### கட்டளைக்கலிப்பா.

செய்யபி ன்னைந் திகழுந்திடும் பன்மணி
செந்நெ லன்னம்பொன் சேர்ந்திடுங் கோடையின்
மெய்ய னம்புலி மெல்லுரி யாடையன்
மெய்ய னம்புலி வேணிய னைங்கரன்
கையி லங்குச பாசத்தன் கஞசநற்
காலி லங்குச தங்கையன் கார்க்கடல்
வைய மேத்துநந் தேசிவி நாயக
வள்ள லைத்தொழு வார்வினை மாயுமே. (17)

### கட்டளைக்கலித்துறை.

மாயும் புவியிடை மாயாத வாழ்வினில் வைத்திடுவான்
வேயும் புகழெழிற் றேண்மோகை யாதிய மெல்லியர்கோன்
தேயும் பிறையணி தேசிவி நாயகன் சேவடியைப்
பாயும் புகழ்த்திருக் கோட்டாற்றிற் போற்றப் பயனெனவே.(18)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பயனேநி றைந்த பழமேப ழுத்த பழமூறு தேனி ரதமே
நயனேமி குந்த நலமேயென் றுன்னை நவிலுளொந்நாளி லுறுமோ
வயனேபு ரிந்த மகவீதெ ழுந்த வருண்மாதர்க் காத லுடனே
மயனேவி ரும்பும் வளநீடுகோடைவளர்தேசிகைங்கைமணியே.(19)

## தூது.

### நேரிசைவெண்பா.

மணியுறுங்கிள் ளாயிவுடன் மையலது தீர
வெணியறுகம் பைந்தொடையை யீயென்—றணிமலியுந

கோசிகமன் கோட்டாற்றுக் கோவணிகர் கோயினின்வாழ்
தேசிகவி நாயகன்பாற் செல். (20)

### சிந்து.

#### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சென்னியிலம் புலியணிந்த தேசிவிநா யகனூர்
திகழ்கோடைத் தெரிவையரே தேசமெலா மறியக்
கன்னியிலை கழிந்தகரு வீன்றிடினு மென்றுங்
கன்னியென்றே காட்டுவிப்பேங் கலங்காம லுமது
புன்னிலைய குமரிவளர் பருவமுதிர்ந் திடினும்
புவியுனவே குமரியென்றே புதுக்குவிப்பே மற்றும்
பன்னரிய சித்திபுளோம் பசிதீர மருந்து
பாலிப்பேம் பசிக்கற்பம் பழஞ்சோறி வீரே. (21)

#### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பழந்துணியுந் தையாதே கசக்காதே யரையுடுத்திப் பலியேற்
றுண்டு, சுழன்றுமன மருண்டடியார் போனடித்துப் பித்தமொடு
திவள்வாரோனுங், குழைநதுருகித் தேசிவிநா யககாவென் றனையேத்
துங்குணமில்லாரே, லழிந்தாலுஞ்சாராத வருட்டுருவாய் கோட்டாற்
றென்னிலங்கைத் தேவே. (22

#### நேரிசை வெண்பா.

ஐங்கரனைக் கோட்டாற்றி யானை முகவனைச்
சங்கரனூர் தந்த சலைகனைத்---துங்கவருட்
டேசிகவி நாயகனைச் சித்தமுட னேவணங்கிப்
பேசிநிலாரு ரோபெறுவர் பேறு. (23)

### தூது.

#### ஆசிரியத்துறை.

போதநிலையினளாப் பிரியாத மனமோடு பிதற்றி யென்பொன்
னோக் தயாமுட னழுதழுதன் னருணடி யயர்ந்தா னையர்
சீராருங் கோட்டாற்றுத் தேசிவிநா யககண்
பாராதேயிருந்தனையேற் பழிக்காமன்றனக்குயிரும்பலியீவாளே. 24)

## கைக்கிளை.

### மருட்பா.

வாட்கண் விஞ்சை வயிற்றுதித்த வாண்மயிலைத்
தாட்கமல மேத்தித் தரவாங்கி—வேட்கையொடு
கானடத்திப் பின்னயில்வேற் கந்தனுக்கீந் தாருவைக்
கானடத்துந் தேசிகனுந் தந்திமுகத—தோனமருங்
கோட்டாற்றி லென்னுளம்போற் கூந்தன் மலர்வாடுந்
தாட்டா மரைகளைப்பூத் தாங்குமாற்—கோட்டாத
கண்ணுடைய பொன்னன்று காணின்
மண்ணுடைய பொன்னே மாலுறவந் தவளே. (25)

### வெண்செந்துறை.

வந்திக்கிற் கோட்டாற்று வாரணமாந் தேசிகக்
கந்தக்க ணேசன் கதிபெற லாமே. (26)

### நேரிசை வெண்பா.

ஆகுக் கொடியானே யைங்கரனே யங்குசனே
பாகுக் குளமிசைந்த பண்ணியனே—பூக்காக்
கோட்டாற்றுத் தேசிகவோர் கொம்போனே யென்றுசொல
மாட்டாதார் வாய்கோறை வாய. (27)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வாயுந்து திக்கு மனமுங்கு விர்ந்து மஞ்சூம்பி றங்கு டலமார்
நோயுந்த விர்ந்து நுகரின்ப மோங்கநொடிவின்றி வீடுமுறும்வன்
பேயுந்து திக்கு முயர்கோடை மேவு பிரமன்பு தல்வியிருவர்
தோயுந்துதிக்கைதிகழ்தேசிகேசர்துணைத்தாணினைந்துதொழவே. (28)

### கலித்தாழிசை.

தொழுநற் றேசிகன் றுய்த்திட மாறரு
மழமுங் நான்குயர் மாதரோ
மழமுங் நான்குயர் மாதர்க ணேசனைப்
பழய கோடையிற் பார்ப்பவர்க் கின்பம்ப லிக்குமே (29)

## மதங்கு.

### கட்டளைக்கலித்துறை.

பலியாக வன்பொடு பார்ப்பார்நெஞ் சைம்மருப் பாற்றினன்பர்
கலிதீர்க்குந் தேசிவி நாயகன் கோயிலிற் கண்மருட்டிச்
சலியாது கொங்கைக ளூக்கினின் றுடும தங்கிகண்வாண்
மலிவாமைக் காப்பன் மறித்தில னேல்வெட்டி வாங்கிடுமே. (30)

### கலிநிலைத்துறை.

வாங்கு வாரிசூழ் மண்ணினற் கோடையம் வரைப்பி
லோங்கு தேசிவி நாயகா வொருமருப் பொடித்த
தூங்கு கைம்முகச் சூரனைத் தொலைப்பவோ சுடர்ப்பொற்
பாங்கு மால்வரை பாரதம் பகர்பவோ பகரே. (31)

### நேரிசை யாசிரியப்பா.

பகருதற் கினிய பரம பதிகொலை
யகமுறத் தெளிந்த வகத்திய முனிதன்
கரக நீரைக் க கமாச் சென்று
பரவிந் திரன்கான் பசுமுறக் கவிழ்த்து
மரிய தக்க னன்பறிந் தன்பொடு
முக்கல முனியாய் முன்பிற் றோன்றித்
தக்க ஞானத் தரிசன மளித்து
மதிதன் சிரவண மதிமுற் பக்கச்
சதுர்த்திநோன் பேற்றுத் தனிப்பழி தவிர்த்தமிவ்
வற்புத வருண்டம் பற்பல புரிந்து
புற்புத முலையெழிற் புத்தி சித்தியும்
விற்பன மோதை மிளிர்பிர மோதை
சொற்கனிச் சுமுகை சுந்தரி மனோரமை
கற்புறு மங்கலை கேசினி காந்தை
காசறு சாரு காசை சுமத்திமை
தேசுறு நந்தினி திகழ்கா மதையு
மாசில்வல் லபையொடு மன்னுங் கோடைத்
தேசிக விநாயகன் சித்த மிரங்கிக்
காசறுத் தென்னைக் காக்கக்
கூசுவான் கொல்லோ குணமுடை யோனே. (32)

## நேரிசைவெண்பா.

குணக்கெழுஞ் செஞ்சுடரோ குங்குமமோ துப்போ
கணச்செம் மணிநீர்க் கடலோ—மணத்தினொடு
காசிலகுங் கோட்டாற்றுக் கந்தனுக்கு மூத்தவருட்
டேசிகவி நாயகன்மெய்த் தேசு. (33)

## குறளவெண்பா.

தேசிகவி நாயகனைத் தென்கோட்டாற் றிற்புகழ்ந்து
பேசிடார் மண்ணிற் பிற. (34)

## வெண்டாழிசை.

பிறங்கு கடலையென் பெய்வளையா ளுண்ணுகிலா
ளுறங்கு கிலாள் கோட்டாற்றுத் தேசிகவோ ரும்பலை
மறந்திலளென் சொல்வனுண் பாண் மண். (35

## களி·

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மண்டையிலே யிரந்துண்ணு மகேசனருண் மைந்தன்
மதியணிதே சிகமுன்னோன் வளர்தரு கோட்டாற்றிற்
றண்டையிலே மறையரற்றுங் தலைவியருட் களியேங்
தாலத்தி னுன்னிறக்குஞ் சான்றோர்க ளுண்டாற்
றொண்டையிலே யமுதூறுஞ் சோதிசுழு முனையார்
துணையாவோ மென்றெமொடு துய்த்திடுவா யுன்ற
னண்டையிலே யகிலமெலா மடங்குமற்ற வெளியா
மனுதினமு மானந்த மாக்குமப்பா வறியே. (36)

## பாண்·

## கட்டளைக்கலித்துறை.

அறுகார் தொடையணி தேசிகன் கோடை யருள்வணிகர்
மறுகார்வல் லூரான் வரவிட்ட தூதென்று வந்தெதிர்ந்தாய்
சிறுகாற் றொடுபிடி தீயாகப் பாணவுன் செய்திகண்டேன்
வெறுவார்த்தைகூறுதல்வேண்டாமுன் றூதொக்கும்வேசையர்க்கே(37

(இதுவுமது)

வேட்டார்க் கருள்செயுந் தேசிவி நாயகர் மேவுமுயர்
கோட்டாற்றின் மன்னும் வணிகர் மறுகன்ன தொற்றவரின்
பூட்டாத் தனுறுத லாளைநற் பாணிற் புகழ்ந்திரந்துந்
தீட்டாக்கல் வீசிச் சினந்தாள் கட்சேப்புச் சிதைக்கிலயே. (38)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிதையாத சிந்தை யுடனேக னிந்து திறனும கிழ்ந்து திகழுன்
கதையாக வின்று கழலேநி னைந்து கதிநாடி யன்பர் தொழநான்
பதையாதி யங்கு பிணமாய லைந்து பவமீது றங்க வசமோ
சுதையோட னங்கள் வளர்கோடை யைங்கை மிளிர்தேசி தும்பி
முகனே. (39)

### கலிவிருத்தம்.

தும்பிக் கையுறு தேசிகத் தும்பியை
நம்பிக் கையொடு கோடையி னுடுமின்
கும்பிக் கையிரை கொள்ளு நமராங்காள்
வெம்பிக் கைதொழு வான்சமன் மெய்ம்மையே. (40

### இணைக்குறளாசிரியப்பா.

மெய்யன் பர்க்கு வினைத்துய ரகற்றலும்
பொய்யன் பர்க்கவை புகட்டலுந் தொழிலாஞ்
செக்கர்ச் சிந்தா மணிவிநா யகவோ
விக்கின ராச விமலவோ
வக்கிர துண்ட வரதவோ
பரையருள் பால சந்தி ரவோ
கரியமான் மருகக் கசான னவோ
மல்லா ரெனவந்த மயூரேசயோ
சொல்லா டத்தகுந் தூமகேதுவோ
டுண்டிவி நாயக வோடுண்டி ராசவோ
வண்டமிழ்க் கிரங்கு மகோற் கடவோ
வல்லபை கணேசவோ வரதக ணேசவோ
வோவென் றன்பர்க ளுருகிக்
காவென் றிறைஞ்சவுட் கனிந்து

கார்வளர் கண்டன் கைத்தடி யடித்துச்
சீர்செயுங் கோடைத் தேசிவி நாயகா
காலனை வெருவிநின் கழலடி யடைந்தேன்
சீலவக் கழலினிற் சேர்த்தருள் வாயே. (41)

நேரிசைவெண்பா.

சேரும பொருளெல்லாஞ் சேரும் பரகதியெப்
பாரும் பரவப் பலிக்குமே—யோசிற்
றிகழ்கின்ற கோட்டாற்றிற் றேசிகமுன் றோனை
மகிழ்வோடு கண்டிறைஞ்சு வார்க்கு. (42)

குறம்.

மடக்கு தாழிசை.

வாராய் செங்கை யனமேசுவை வாயா அதை யனமே
வருநெல் லொன்று மூன்றே கா மருவிற்றுள மூன்றே
சீராக மஞ்சேனலஞ் சேர்பின்னரு மஞ்சே
சிறுநுண் ணிடைக் கொம்பேசுகஞ் செயுமொன்றெனக் கொம்பே
ஏரா ருளிற்கண்ணேயெணி லெழின்மூன்றவை கண்ணே
யெழுந்த வஞ்சு கரமேதரு விசைகோடைந கரமே
கூராருன்கை கரியேகுறக் குறிதேசிகக் கரியே
குழையாய்மிகா தரவே பழங் கூறைகஞ்சி தரவே. (43)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தருவுடையான் றுதிக்கைக்குத் தகுந்துதிக்கைத் தருவே
தானவருந் தனைவழுத்தத் தவமருளுந் தவமே
நிருவிகற்ப நிலையினர்க்கு நிழலளிக்கு நிழலே
நினையாது நினைபவருண் ணிலையமுறு நிலையே
திருவளருங் கோடைநகர் தெளியவளர் தெளிவே
தேடியன்பர்க் கருள்புரியுந் தேசிவிநாயகனே
யுருவுகொடு பிறந்தவெனை யுறவுகொள்ளு முறவே
யுன்றனையே சிந்தைசெயு முயர்மதிதந் தருளே. (44)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மதிதவழ் கின்ற பொழில்வளை கோடை வளநகர்வணிகர்தம்மறுகிற்
கதிதர வளருந் தேசிக வைங்கைக் கயமுக மிளிர்கண பதியே
விதியினை நினையா திடமனை வெருவா வினைமத னையுமதி யாது
துதிகொளு முனையே துணையென நினையுஞ் சுகமருள் வேண்டுமென்
றனக்கே. (45)

## மடக்கு.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தனக்கென் றொன்று முள்ளானே தயையும் பொறையு முள்ளானே
வனச்செஞ் சடைவெண் மதியானே வளர்தே சிகனன மதியானே
மனத்தைநவ கரணகோட் டாற்றானே மலையினொருகோட் டாற்றானே
கனத்த கதையைத் தந்தானே கருதா விடிலே தந்தானே. (46)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவண்ணவிருத்தம்.

தானேவி யந்து தனையேபு கழ்ந்து தவமேம றந்து தளராதே
தேனேரு செஞ்சொ லுடனேநி னைந்து தெளிவோடி றைஞ்சவ
ருள்வாயே, கானேரு பொங்கர் மலிகோடை மிஞ்சு கவினூரு மை
ந்து கரநீடா, மானேருதிங்க ளணிதேசி யங்கண் வளர்தீர விண்டு
மருகோனே. (47)

### நேரிசைவெண்பா.

மருந்துன் புயமாமென் மான்மயனேயக் கந்நாள்
வருந்துமுயிர் மாரனம்பால் வாடல்—தெரிந்துவயல்
சூழ்வழங்குங் கோட்டாற்றுத் தேசிகவோர் கொம்பவுயிர்
வாழ்வளிப்பா யன்போடு வந்து. (48)

## வண்டு.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வந்திரந் தடியார் வணங்குதே சிகநல் வாரண மன்னுகோட்டாற்றி
லிந்திரன் வருண னெழிற்குகன் திருமா லிருநில மலர்களுநுகர்ந்தங்
கந்தர மகளிர் குழல்களி னணுகா தணிமலர்த் தாதுங்கொள்ளளியே
சந்திரமுகத்தென் றையல்வாய்க் குமுதத் தனிமண மவனுறிற்
சாற்றே. (49)

## பொய்பாராட்டல்.

### நேரிசைவெண்பா.

சாற்றரிய தேசிகனார் தந்திமுகன் கோட்டாற்றென்
னேற்றமின்னே நின்பதத்தி னேர்பெறற்கா - நாற்றமுறக்
கண்ணீரி றைத்துமொரு காலினின்று கஞ்சமென்றுந்
தண்ணீரிற் செய்யுந் தவம். (50)

### கலி விருத்தம்.

தவமு மன்புறு தானமுஞ் செய்யினு
மவம கன்றிடு வார்கொலோ கோடையிற்
சிவப ரன்சுதன றேசிக மாமுகத்
திவனை முன்றொழு மின்பறி யாரரோ. (51)

### நேரிசைச் சிந்தியல் வெண்பா.

அன்புறநற் றேசிகனை யைங்கரனைக் கோட்டாற்றி
னின்புறநின் றேத்தாத வீனர்க்குப்—புன்புவியல்
செனனமிறுமோவுட் டிருக்கு. (52)

## கார்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருமருப்பாற் றெழில்வணிகர் தெருவில்வளர் கருணை
திகழுமொரு மருப்பைங்கைத் தேசிவிநா யகனபோன்
றுருபிறைக்கொம் புடைப்புகரோ டுறுகாயத் தோடார்ந்
ததவுமருண் மழைக்கைவள ருயர்கரித்தே சுடனே
வருமுகிலே நினதருள்போல் வையகம்ற் றிலையால்
வாரமுட ஞன்புகலும் வாய்மையொன்று நீடைந்
தநுமிகரைங் கையன்பர் தழுவியெனைக் கொளுநா
டாமிதமின் றேலதனைச் சாற்றியகல் வாயே. (53)

### கட்டளைக்கலித்துறை.

வாயாத மானுடச் சன்மத்தில் வந்துமுன் மாணடியை
யோயாது சிந்தித் துயர்கதி சேரு முரிமைவிட்டுப்
பேயாக வோடிப் பிதற்றுந ரின்பம் பெறுவதென்னே
யாயமரி லார்தொழுங் கோட்டாற்றுத் தேசிக வைங்கரனே 54)

## இரங்கல்.

### வெண்டுறை.

காவிலர்முன் பண்ணியங்கொம் பங்குசம்பா சங்கலசங் கவி
னத் தோன்றி, வரமளிக்குந் தேசிகவி நாயகனு ரன்பிறெடு வளர்
கோட்டாற்றின், மரமிலங்கும் புன்னையிசை மன்னுபுற வீரே, சுர
மகன்ற வன்பருக்கென் றுயாதுசொல் வீரே. (55)

### நேரிசைவெண்பா.

வீரமொடு மூவுலகு மேவுமுய ருந்தருவை
வாரமொடு கேதனமா வானுயர்த்த—நீரமுறு
கோட்டாற்றுத் தேசிகவோர் கொம்புடையே ரம்பனருட்
பாட்டாற்று வார்க்காம் பதம். (56)

### வஞ்சிவிருத்தம்.

பதங்க ளுடுநர் பன்னதி
மதம்பெய் தேசிக மாமுகன்
சதங்கை சூழ்கழல் சார்வருட்
பிதுங்க நாடிலர் பின்னமே. (57)

## காமமிக்ககழிபடர்கிழவி.

### கட்டளைக்கலித்துறை.

பின்னேசெங் காறலை முன்னீட்டி யோடும் பெருங்குருகீர்
என்னேசர் தேசிவி நாயகன் கோடைவிட் டேகினராத்
தங்கேச வென்னெஞ் சனைநீத்தே கிற்றதைத் தாமெதிர்ந்தா
லங்கேச ரிங்குறு முன்னே வரச்சொலு மன்புடனே. (58)

### கலிநிலைத்துறை.

அன்பரானவ ரமரர்க ளயனரி யவர்க்கு
முன்ப ராகிநற் கோடையிற் றேசிக முனிதா
ளின்ப மெங்கணு மெய்துவ ரேனைய ரிகத்துத்
துன்ப மாந்திப்பின் மறுமையு மெய்துவர் துன்பே. (58)

## தன்னுட்கையாறெய்திடுகிளவி.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தன்போது நகரைப்புரக்குந் தேசிவிநா யகன்கோடைத் தரு மந் தன்னி, லென்போது முடல்பசந்தாய் சிறையுற்றாய் வாய் சிவந்தா யிசைதேர் கிள்ளாய், மென்போது தொடுத்தமண மாலை யன்பிற் சூட்டாது விட்டே கென்றன், மன்போது முனையொரு மன் றுறந்தனனே விரகமுண்டோ மயக்கற் கென்னே. (60)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மயங்கி யன்பின் வழுத்திநின்ற வடிவே லற்கா
வனத்திலொரு மதமாவாய் வள்ளிக் குள்ளப்
பயங்காட்டி யருள்புரிந்த பவள மேனிப்
படர்சடைமுக் கண்ணுடனே பகர்கோட் டாற்றிற்
றயங்கவளர் தேசிவிநா யகன்றன் றாள்க
டமைநினைந்து பணிபவர்க்கே சகத்தின் மிக்க
நயம்பெருக்கிப் பகைதவிர்த்து நலிநோய் தீர்த்து
நனிபெறுநல் லின்பமெல்லா நல்கு வானே. (61)

கலிவிருத்தம்.

நல்கு வானருட் டேசிவி நாயகன்
மல்கு கோடையில் வாழ்த்துநர்க் கிப்புவி
ஒல்கு சிந்தை யொழித்துயர் வாக்கறம்
புல்கு பொன்னற் புகழ்சுகம் போகமே. (62)

நேரிசை வெண்பா.

போகமருள் கோட்டாற்றுப் பொற்றேசி கைங்கரவோர்
வேக விரணியனை வீழ்த்திடமான்—மோக
வரிமுகத்தைக் கொள்ளு மறிவுதிப்ப வோமுன்
கரிமுகத்தைக் கொண்டாய் கனிந்து. (63

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கனியிருக்கக் காய்நுகரக் கருதுநர்போ னுன்
கழலிருக்க நீயிருக்கக் கவின்கோட்டா றிருக்க

தனியிருக்கு மிருக்கமின்றன் றண்ணருளு மிருக்கச்
சார்ந்துபிற காடலைந்து தவித்துழன்று சலித்தே
னியிறக்க மாகினது நாண்மலர்த்தாள் பிடித்தே
னழுவிடா திருக்கவரு னல்குவையோ தெரியேன்
முனிவர்கட்குத் தேவர்கட்கு முத்தர்சித்தர் கட்கு
முத்திதருந் தேசிகனு முனிமுகமுன் ஞேனே. (64)

வேறு
முன்ஞேனை முக்கணனை முத்தொழில்வல் லோனை
மூவுலகு நிறைந்தவனை முனிமுகனை யன்பாற்
பின்ஞேனு மாறுமுகன் பேணுமரு ளோனைப்
பெரியமுகின் மேனியன்றன் பிரியமரு மகனைக்
கன்ஞேன்மை புறவிலிமுற் காதலனைக் கோடைக்
கணபதியைத் தேசிகனுங் காமதைகோன் றன்னை
நன்ஞேன்பி னைந்துருகி நாணுளுந் துதித்துண்
ணுடினையேற் பிறந்தபய ணுடினையா மனமே. (65)

## செவிலிதன்னறிவின்மைதன்னைநொந்திரங்கல்.

### கட்டளைக்கலித்துறை.

மனமேவு தேசிவி நாயகன் கோடையென் மங்கையிந்தத்
தினமேய ருந்துக நாளைக் கெவர்கொலென் செய்குவையென்
றனமோடு ரைத்ததை யாய்ந்தில னேயவ ளன்பனுடு
கனலேய ருஞ்சுரஞ் சேர்ந்தேயந் தோபயன் காட்டினளே. (66)

### ஆசிரியத்தாழிசை.

காணவுங் கருதவுங் கவின்மொய் கோடையிற்
பேணவும் பிறங்கினன் றேசி யைங்கரன்
கோணிடர் குணர்ந்தருங் கரங்கள் கூப்பவே. (67)

### விருத்தக்கலித்துறை.

கூப்பாத கைகள் குடிலுக் கிணைத்த கொடுங்கைகணன்
ஞப்பாத்தியத்தி னவிலாத நாக்குத் தறிநாக்கெமைக்
காப்பாயென் றும்பர் தொழுந்தேசிகக்கைக் கரியைப்பல
தோப்பாரு கின்றநற்கோட்டாற்றினுண்பர்தொழார் துன்பமே. (68)

## தலைவியிரங்கல்.

### ஒருபொருண்மேன்மூன்றடுக்கிவந்தவெள்ளொத்தாழிசை.

தன்பொழியக் கோட்டாற்றுத் தொழிவயிற் றைந்துகரத்
தென்பெருமா னின்பாலந் தெய்திலனே யெய்துவனேல்
வன்புவியி லின்றோ வயம்.

அன்னமலி கோட்டாற்றி யானைமுகத் தம்மான்றன்
பின்னமற வந்தென்னைப் பேணிலனே பேணுதல்போன்
மன்னவனுக் குண்டோ வயம்,

தென்புவியிற் கோட்டாற்றுத் தேசிகவி நாயகனென்
றன்பிறக்க வன்பாகத் தோன்றிலனே தோன்றிவந்து
மன்புரக்கி லுமே வயம். (69)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வயன்மேவு கஞ்ச மலரேய்ப தங்கள் வனமுண்மிதிப்ப வசமோ, கயன்மேவு கண்கள் பொழிநீர் துடைத்துக் கடவெம்மை தீர்க்க வுளரோ, மயன்மேவி யைங்கை வளர்தேசிகேசர் மகிழ் கோடைவீழி யுடனே, புயன்மேவு கின்ற புனலேவறப்பப் புகையார் சுரஞ்சென் மகளே. (70)

### இன்னிசைவெண்பா.

மகம்விளங்குங் கோடை வணிகர்மறு கார்ந்தென்
னகம்விளங்குந் தேசிகனை மத்தி முக மோடு
நகம்விளங்கு மேனியனை நாடுமன்பர் கட்குச்
சுகம்விளங்குஞ் செய்யுமின்மெய்த் தொண்டு. (71)

### இன்னிசைச்சிந்தியல்வெண்பா.

தொண்டு புரிமினுந் துன்பமெலா நீக்கிடுவான்
தெண்டிரைசூழ் கோட்டாற்றுத் தேசிகவி நாயகனை
யண்டிக்கேட் டைவிட் டகன்று. (72)

## தூது.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கன்றுகுணி லெனக்கொண்டோன் கன்னியர்பன் னிருவர்கடங் கணவ னாகி, என்றுமினிர் தேசிகவைங் கரன்கோடைக் கிருங்கடல்

சேர்க் தேருங் காரோ, ஒன்றுனேயிங் கிரக்கின்றே னெனேச்சேர்ந்து
துறந்தகன்ற வொருவே லர்க்குத், தன்றமத னம்புகளென் னுயிர்
கொளுமுன் சென்கவெனச் சொல்க வென்றே. (73)

கலி விருத்தம்.

சொல்லின் போம தூதியுமின் கோடையிற்
செல்லின் மிஞ்சருட் டேசிவி நாயக
னல்லின் மிஞ்சு மகவிரு ணீக்கியே
நல்லின் பீகுவ னுசனும் போற்றவே. (74)

நிலமண்டிலவாசிரியப்பா.

போற்றுமி னேத்துமின் புகன்மின் புகழ்த்துதி
யாற்றுமி னரற்றுமி னனன்முன் னரக்கென
வுருகுமி னுருகி யுள்ளுமின் விழிநீர்
பெருகநின் றுமிமின் பேணுமி னன்பொடு
வழுத்துமின் வளையுமின் வணங்குமின் பொழிற்கனி
பழுத்திழி யிரதம் பாய்ந்துகா லோடி
வயல்வி்ளை கின்ற வளம்பல வோங்கு
மியல்புறுங் கோட்டாற் றிபமுக வைங்கைத்
தேசிவி நாயகன் சேவடி தொழுமி
னுசறுத் தருட்கதி யருளுவ னறிந்தே. (75)

ஒருபொருண்மேன்மூன்றடுக்காசிரியத்தாழிசை.

அறிந்துயர் கோட்டாற்றி லெனதத்திமுகத் தோனுன்
மறிந்திடுமுன் னென்முன் வருவானோ வந்தாற்
சிறந்தவறு கின்கான் செழிக்குமன மந்தோ.

மன்னுமெழிற் கோட்டாற்றென் மாணுடலங் காடு
துன்னுமுனே யோர்கொம்பன் றோன்றுவனோ தோன்றின்
மின்னுமொரு கொம்பொளிமுன் மேவுமன மந்தோ.

செழிக்குமருட் கோட்டாற்றுத் தேசிவிநா யகனூர்
பழிக்குமுனே வருவானோ பழிக்குமுனம் வரினே
வழிக்குதியா னுத்தவச மன்னுமன மந்தோ. (76)

## தூது.

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அன்னமலிந் துன்னும்வயன் மன்னுயர் கோட்டாறு
மணிநகரின் வணிகர்மறு கைங்கரத்தே சென்று
னென்னுடைய நுதலெழிலும் விழியெழிலு முலையா
மிணையெழிலு முட்பாச மெனுமெழிலுங் கவர்ந்தே
தன்னிடத்தைங் கைகளினுந் தனிக்கோடங் குசநீர்
தாங்குகுடம் பண்ணியம்பா சம்மெனவே கொண்டான்
பின்னமிலா வக்குறிகள் கரிநாடி யவனைப்
பேணிமகிழ் வித்தனமே கூட்டிவரு வாயே. (77)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வரும்போ மென்னு மொழிதீர மணிபொன் னிலையாய் வளர் கோடைக், கரும்போ டுறழு மொழிவல்லபை கணவா தேசி விநாயக கான், சுரும்போ டறுகம் பைந்தொடையாய் சுமுகா வென்று தொழவருணீ, தரும்போ தன்றி வாய்த்திடுமோ தருவா யன்பு தமி யேற்கே. (78)

### பஃறொடை வெண்பா.

தமியேன் கொடியேன் றளர்ந்தே தரையி
னுமியேனு மன்போ டுதவார்பாற் சென்று
விமியேக ரைந்துழலும் வீண்டொழிலை யன்னை
தவநிலையி னுடையதன் றந்தையென மேவிச்
சிவவடிவக் காட்சிதந்த தேசிகவோர் கொம்ப
குமுதம் விரிக்குமுத்தங் கூடும்வயற் கோட்டாற்
றமலவைங் கையா யகற்று. (79)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அசன்ற சிந்தை யொடுதயையு மறிவும் பொறையு மருணிறையுஞ்
சகங்க ளெல்லாந் தானென்றுட் டாங்குங் குணமுந் தருவாயே
முகுந்த னருந் தொழுங்கோடை முக்கட் டேசி கைங்கரனே
யிகந்து வேண்டற் குனையன்றி யெனக்கு வேறு திக்கிலையே. (80)

## காலம்.

### பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திக்கெட்டொ டண்டங்க ளுந்துஞ்சு காலமுந் திங்களும் போங்கா லமுந், தினகரனும் விண்மீன்க ளுஞ்சிந்து காலமுந் தேவருஞ் சாங்கா லமுஞ், சக்குற்ற வுடலனும் பிரமனும் விண்டு வுஞ் சண்டனும் போங்கா லமுந், தத்வநிலை யாக முதலவனோ டொடுங்கியே தானிற்குமாமாதலால், முக்கற்க ணுயர்தவ முனிக்கு ரியதேசிக முன்னவன் கோட்டாற் றினன், முத்திபெறு தற்குரிய காலமெக் காலமு மொக்குமென்றும் மற்றவை, பக்கத்த னன்ப ரொடு தனிமையாய் நின்றிலகு பதிதரும் பல்கற் பமாம், பலகால மாகுமவை யன்றியிலை யென்றுமே பகர்தரு நற்கா லமே. (81)

### வஞ்சிப்பா.

காலைத்தெறு கயிறுற்றிடு
சீலக்கர மிளிர்தேசிகப்
பாலக்கண பதிமாமலர்க்
கோலக்கழல் குறிவைத்தக
நாளும்
வாதில்சீர் கோடையில் வணங்குநின்
மேதிமேல் வருமவன் வினைதெறு வானே. (82)

### கட்டளைக்கலித்துறை.

வானேடு மண்ணும் வழுத்துந்தென் கோடையின் வல்லையமா
மானோடு மன்னுநற் றேசிவி நாயகன் மாணடியைத்
தேனோடு பாலுங் கலந்தாங்கின் சொல்லிற் றினந்துதிப்போர்
மீனோடு லாவுறு மேலோரு மேத்த விளங்குவரே. (83)

### இன்னிசைவெண்பா.

விளங்குமெழிற் கோட்டாற்றின் மேன்மைமிகு நெஞ்சே
யுளங்குளிரத் தேசிகனு மும்பன்முகத் தோனைக்
களங்கமன மற்றுரிய கண்மணிவெண் பூதி
வளங்கொளமெய்க் கொண்டுநின்று வாழ்த்து. (84)

### நேரிசைவெண்பா.

வாளுமம்பு மாரன் வலித்துவிட்டான் கோட்டாற்றெந்
நாளுமகிழ் தேசிகவி நாயகனே—நீளொன்
கமழ்குழலா டன்னைக் கருக்கிக் கருக்கு
மமளியையுங் காம வனல். (85)

## தவம்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அனலேய மர்ந்துமுயர் வளியேறு கர்ந்துறலை யலையேபுகுந்து மகழார், புனலோடு றைந்துமிருள் வனமேய டைந்துமகி புரிவார்கள் செய்தவமெலா, மனமேயி சைந்துயிர்கண் மகிழ்வானலளியோடு வாழ்வார்மு னீடாகுமோ, தனமேவு கோடைவளர் தேசிகவி நாயகர் தாளோது தவமன்றியே. (86)

### ஷை

தவமாகு மிஃதென்று நண்ணாசி முனையிலே சார்ந்துநின்றே செய்யினுஞ், சிவமாகு மிவையென்று பிறவுயிர்க டங்களைத் தேடிப்புரக்காரெனி, லவமாகு மல்லாது தவமில்லை யாதலா லன்போடு கோட்டாற்றினி, னவமாக வமர்கின்ற தேசிகவி நாயக னறைதுன்று தாணம்புமே. (87)

## கொற்றியார்.

### நேரிசைவெண்பா.

நம்பன்கு லக்குறியா நாமந் துழாய்வேய்ந்த
கும்பங்கொண் டாடியமால் கொற்றியே—நம்பனருள்
தேசிகவி நாயகனார் சிந்தையேன் கோட்டாற்றென்
கூசினையுட் சங்கையுண்டோ கூறு. (88)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கூன்காட்டும் பிறைகாட்டுங் குங்குமச்செந் நிறங்காட்டுங் குலையாவேணி, மான்காட்டும் விழிகாட்டு மதிமுகஞ்செவ் வாய்குமுதம் வயங்கிக் காட்டுந், தேன்காட்டுஞ் சொல்வலமை திகழ்பா

கங் காட்டுமைங்கை தெரியக் காட்டும், வான்காட்டுந் தண்டலை
களவளர்கோடைத் தேசிகமா முகவ னார்க்கே. (89)

### வண்ணக்கலித்துறை.

மாமுக மோடுறு தேசிவி நாயகர் மதியீவார்
காமுக ராதியர் நேசமு றுதுயர் கதிர்வீடு
சீமுக மாருந லோருற வாயவர் திறமாவாழ்
பூமுக மாவளர் கோடையி லேதுதி புகல்வீரே. (90)

### கட்டளைக்கலித்துறை.

புகலேயென் றுள்ளுனித் தேசிவி நாயகன் பூங்கழலை
யகலேனெ னத்திருக் கோட்டாற்றி லேத்துமுள் ளன்பினர்தாள்
பகலோ டிரவுறப் பன்னுறு மேத்தும் பணியினரை
யிகலேயி லாமலெந் நாளும் புகழ்ந்திடு மெண்டிசையே. (91)

## பிச்சியார்

### நேரிசைவெண்பா.

திசைமுகவன் செல்விகள்கோன் றேசிகவைங் கைய
னிசையருவுங் கோட்டாற்றி லின்ப—நசையாற்
றலைமழுக்கி வேலெடுத்துச் சார்ந்தபிச்சி யேயின்
கலைமுகத்திற் காண்பொருளென் காட்டு. (92)

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காசினியும் விண்ணுமெணக் கடனஞ் சுண்ட
கண்ணுதறன் முதன்மகனுங் கவின்கோட் டாற்றுத்
தேசிகவி நாயகனே தென்கோ னீற்றிற்
சீறிவரு வான்கொலென்று சிந்தை சோர்ந்து
கூசியுட னடுநடுங்கிக் குலைந்தே னையுங்
குறைவகற்று வானென்னுங் குறிப்புற் றுன்னைப்
பேசிநின்றேன் றுயர்வெயின்முன் பனிப்போற் றீர்த்துப்
பெரியவின்பச் சுகமளித்துப் பேணுவாயே. (93)

### வேறு.

பேணினுநீ பேணுதே பிரித்திடினு நினது
பிரசமிழிந் தொழுகுமிதழ் பிறங்குமல ரடியைக
காணுவது மாற்றுகிலேன் கழறுவது மறவேன்
கருதுவதுந் துறவாதே கடைப்பிடிப்பே னதனுன்
மாணுறுநல் லளிநுகர மதுமழைபெய் தரும
மலரொடுபல் கனிவழங்கும் வளமுறு கோட்டாற்றிற்
சேணுறுவா ரிறைஞ்சவளர் தேசிவிநா யகனே
சிறியனெனை யன்பினொடு சிந்தைமகிழ்ந் தருளே. (94

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிந்தனை யுடையார்க் கின்பருள் கோடைத் தேசிவி நாயகா சிறியேஞ், சந்தத வன்பு நந்தனந் தனக்குத் தண்புனல் பாய்ச்சிட வேவா, வந்தனப் பாடல் யாக்கையோ டெடுத்து வாவ்வரை வைத்திடச் செய்யா, தெந்தம தன்பும் பாடலுஞ் சுகமா யேற்றணிந்தின் புறத் திரங்கே. (95)

### கலிவிருத்தம்.

இரந்து ளன்பொ டிறைஞ்சுநர்க் கின்னருள்
சுரந்து கோடையிற் றூயறு கந்தொடை
சிரந்து ளங்குருட் டேசிவி நாயகன்
கரந்தி டாதளிப் பான் கவின் சித்தியே. (96)

### உளர்.

### இன்னிசைவெண்பா.

சித்திபுத்தி கோனுருந் தேசிகவி நாயகனூர்
நித்தியத்தி னெங்கு நிறைந்தாலு—நல்வணிகர்
வர்த்தகத்தால் வாழும் வளநகராங் கோட்டாறே
யுத்தமத்தில் வாழ்கின்ற வூர். (97)

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஊருசின்ற வுந்துருவை யோர்துவச மாக்கொண்
டும்பருட னிம்பர்தொழு தய்ந்திடுவா னுன்னிக்

காரிலங்கு முயர்தருமக் கவின்மிகு கோட்டாற்றிற்
காணவளர் தேசிகவி நாயகன்றன் கழல்கள்
சீரிலங்கு நால்வகையாஞ் செறிமலரு மறுகுந்
தேடிமன தோடிடவுந் திகழ்சொன்மலர் நான்காற்
தாரிலங்கத் தொடுத்தன்பிற் றரவுமறி யாதேன்
றனக்கருளும் பயனெவனோ சகத்திலறி யேனே. (98)

கலிநிலைத்துறை.

சகத்து வெண்கரி தருமருப் பாற்றினிற் றனிமெய்
நகத்து திக்கையந் தேசிவி நாயக னலமார்
மகத்து வப்புகழ் வாயினல் வழுத்தினர் நாளு
மகத்து ளூர்கள்வல் லந்தகாரங்கொளுஞ் ஞானம். (99)

நேரிசைவெண்பா.

அஞ்ஞான நீக்கியென்னுள் ளார்ந்தனராற் கோட்டாற்று
மெய்ஞ்ஞான தேசி வி நாயகனு—மெஞ்ஞான்றுஞ்
சித்தக் கமலத்திற் செவ்வியதந் தாட்கமலந்
தித்திக்க வூற்றுமருட் டேன். (100)

[முற்றிற்று.]

விக்டோரியா பிறஸ், நாகர்கோவில்—1915.

# பி ழை தி ரு த் த ம்



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 11 | தெனக்கு | தெமக்கு |
| 2 | 30 | சரணக | சரண்க |
| 5 | 21 | வகுதா | வருதா |
| 6 | 30 | பனுமதி | னும்பதி |
| 7 | 17 | வளள | வள்ள |
| 9 | 17 | சொல் | சொல |
| 10 | 32 | கொல்லொ | கொல்லோ |
| 12 | 24 | ரேசவோ | ரேசாவோ |
| 14 | 10 | சிகனன | சிகனன் |
| ... | 11 | தைஙக | தைங்க |
| ... | ... | டாறறு | டாற்று |
| 15 | 10 | ரனசுதன | ரன்சுதன் |
| ... | 19 | யகனபோ | யகன்போ |
| 19 | 17 | செனமக | சென்மக |
| 22 | 7 | மாதலால் | மாமாதலான் |
| ... | 15 | பாலகண | யாலக்கண |
| 25 | 2 | ரடியைக | ரடியைக் |

